# Beginner Course - தேவன்/God

# 10

# தேவன் நம்மோடு பேசும் வழிகள்

YESUDAS SOLOMON

# பொருளடக்கம்

- ஏன் இந்த வீடியோ?
- இந்த காலத்தில் தேவன் நம்மோடு பேச பயன்படுத்தும் பிரதானமான / முக்கியமான வழி
- முக்கிய குறிப்புகள்
- தேவன் பேசும் மற்ற வழிகள்

# ஏன் இந்த வீடியோ?

- ஆவிக்குரிய வளர்ச்சியடைய
  - உங்களுக்கும் தேவனுக்கும் உள்ள ஆன்மீக உறவு வளர
  - உங்களுடைய அன்றாட வாழ்வில் தேவனுடைய சித்தத்தை அறிய
  - ஒன்றுக்கும் மேற்ப்பட்ட வழிகளில் தேவன் பேசுவார்
- எதிர்ப்பவர்களின் கருத்து
  - வேதம் வழியாய் மட்டுமே பேசுவார்
  - ஊழியர்களிடம் மட்டுமே பேசுவார்
  - ஞானஸ்நானம் எடுத்தால் மட்டுமே
  - அபிஷேகம் அவசியம்

# தேவன் நம்மோடு பேசும் பிரதானமான / முக்கியமான வழி

# 1. பரிசுத்த வேதாகம வசனத்தின் மூலமாக

- கிறிஸ்தவ வேதமான "பரிசுத்த வேதாகமம்" / பைபிள் வசனங்களின் மூலம் தேவன் பேசுவார்

**பரிசுத்த வேதம் / பைபிள் சத்தியமானது:**

- ஒவ்வொரு **எழுத்தும்** சத்தியமானது - தானி *10:21*
- எழுத்துக்கள் சேர்ந்த **வார்த்தைகள்** சத்தியமானது - *2* சாமு *7:28;* நீதி *22:20*
- வார்த்தைகள் சேர்ந்த **வசனங்கள்** சத்தியமானது - சங் *119:43,160;* யோவா *17:17; 2* கொரி *6:7; 2* தீமோ *2:15;* வெளி *22:6*
- வசனங்கள் சேர்ந்த பரிசுத்த **வேதம்** சத்தியமானது - சங் *119:142;* மல் *2:6*

**எழுதினவர்கள்:**

- தேவ ஆவியினால் ஏவப்பட்டு எழுதினார்கள் - *2* தீமோ *3:16*
- சுயமாய் பேசவில்லை, எழுதவில்லை - *2* பேது *1:21*
- தேவனே பங்கு பங்காக வெளிப்படுத்தி எழுதிவைத்தார் - எபி *1:1,2*

# 1. பரிசுத்த வேதாகம வசனத்தின் மூலமாக

பரிசுத்த வேதம் மற்ற புத்தகங்களை விட சிறந்தது:

- வல்லமை உள்ளது / *It has power* - எபி *4:12*
- ஜீவன் உள்ளது / *It has Life* - எபி *4:12*
- ஆவியாய் இருக்கிறது - யோவா *6:63*

வசனத்தின் மூலம் எப்படி பேசுவார்:

- வேதம் வாசிக்கும் போது
- மனப்பாடம் செய்த வசனங்கள் மூலம்
- வசன காலண்டர்
- வசன அட்டை
- *Bible Stickers* - வசன ஸ்டிக்கர்
- *Bible Boards* - வசன போர்ட்
- மற்றும் பல

# முக்கிய குறிப்பு

- நமக்கு புரியும் வகையில் தேவன் வெவ்வேறு வழிகளில் பேசுகிறார்
- எந்த வகையில் பேசினாலும், எப்பொழுது பேசினாலும், எப்படி பேசினாலும் பரிசுத்த வேதமாகிய பைபிளில் சொல்லப்பட்டதற்கு மாறாக ஒருநாளும் பேச மாட்டார்
- கீழ்கானும் ஏதாவது ஒருவகையில் உங்களோடு பேசுவதாக தெரிந்தால், அது வேதத்தில் உள்ளபடி இருக்கிறதா என்று பார்ப்பது மிகவும் அவசியம்
- அப்படி பார்க்கவில்லை என்றால் கள்ள உபதேசங்களில் சிக்கிக்கொள்ள நேரிடும்
- இன்றைக்கு அநேகர், வேதத்தில் இருக்கிறதா என்று பார்க்காமல், வேதத்தை தங்களுடைய இஷ்டத்திற்கு ஏற்ப புரிந்துகொண்டு தவறான பாதையில் செல்கிறார்கள், மற்றவர்களையும் கெடுக்கிறார்கள்
- தேவன் தான் பேசுகிறார் என்பதை பல முறை உறுதிப்படுத்தி கொள்வது அவசியம்
- நாம் சரியாக புரிந்துக்கொள்ளும் வரை நமக்கு திரும்ப திரும்ப சொல்லிகொடுப்பதற்கு தேவன் ஆயத்தமாகவே இருக்கிறார்

2. தேவன் நம்முடைய காது கேட்க பேசுவார்

# 2. தேவன் நம்முடைய காது கேட்க பேசுவார்

- ஆதாம் - ஆதி 3:9-19
- நோவா - ஆதி 6:13-21
- ஆபிரகாம் - ஆதி 12:1-3
- மோசே - யாத் 20:1-17
- யோசுவா - யோசு 1:1-9
- சிறுவன் சாமுவேல் - 1 சாமு 3:1-14
- நாத்தான் - 2 சாமு 7:4-16
- எலியா - 1 இரா 17:2-4; 1 இரா 19:11-13
- எரேமியா - எரே 1:4,5
- யோபு - யோபு 40, 38:1
- யோபுவின் நண்பர்களிடம் - யோபு 42:7,8
- சீடர்களிடத்தில் - மத் 3:17; 17:5

# 3. தூதர்கள் மூலமாக

**பழைய ஏற்பாடு:**

- ஆபிரகாம் - ஆதி 18
- லோத்து - ஆதி 19
- தானியேல் - தானி 8:16-26; 9:21-27 (காபிரியேல்)
- தாவிது - 1 நாளா 21:16 - (ஜெபிக்கும் போது தேவனை நோக்கி ஜெபித்தார்)

**புதிய ஏற்பாடு:**

- சகரியா - லூக் 1:11-20
- மரியாள் - லூக் 2:26-37
- மேய்ப்பர்கள் - லூக் 2:8-14
- சில பெண்கள் - மத் 28:5-7
- பேதுரு - சிறைச்சாலையிலிருந்து வெளியே வருதல் - அப் 12:7-10

# 4. இயற்கை மூலமாக

இயற்கை மூலமாக பேசுவது, கண்களினால் பார்த்து புரிந்துகொள்ள முடியும்

சங் *19:1-4*

- வானங்கள் தேவனுடைய மகிமையை வெளிப்படுத்துகிறது, ஆகாயவிரிவு அவருடைய கரங்களின் கிரியையை அறிவிக்கிறது.
- பகலுக்குப் பகல் வார்த்தைகளைப் பொழிகிறது, இரவுக்கு இரவு அறிவைத் தெரிவிக்கிறது.
- அவைகளுக்குப் பேச்சுமில்லை, வார்த்தையுமில்லை, அவைகளின் சத்தம் கேட்கப்படுவதுமில்லை.
- ஆகிலும் அவைகளின் சத்தம் பூமியெங்கும், அவைகளின் வசனங்கள் பூச்சக்கரத்துக் கடைசிவரைக்கும் செல்லுகிறது; அவைகளில் சூரியனுக்கு ஒரு கூடாரத்தை ஸ்தாபித்தார்.

# 4. இயற்கை மூலமாக

## அப் 14:15-17

- மனுஷரே, ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? நாங்களும் உங்களைப்போலப் பாடுள்ள மனுஷர்தானே; நீங்கள் இந்த வீணான தேவர்களைவிட்டு, வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள யாவற்றையும் உண்டாக்கின ஜீவனுள்ள தேவனிடத்திற்குத் திரும்பவேண்டுமென்று உங்களுக்குப் பிரசங்கிக்கிறோம்.
- சென்ற காலங்களில் அவர் சகல ஜனங்களையும் தங்கள் தங்கள் வழிகளிலே நடக்கவிட்டிருந்தும்,
- அவர் நன்மை செய்துவந்து, வானத்திலிருந்து மழைகளையும் செழிப்புள்ள காலங்களையும் நமக்குத் தந்து, ஆகாரத்தினாலும் சந்தோஷத்தினாலும் நம்முடைய இருதயங்களை நிரப்பி, இவ்விதமாய் அவர் தம்மைக்குறித்துச் சாட்சி விளங்கப்பண்ணாதிருந்ததில்லை என்றார்கள்.

# 4. இயற்கை மூலமாக

## ரோம 1:18-20

- தேவனைக்குறித்து அறியப்படுவது அவர்களுக்குள்ளே வெளிப்பட்டிருக்கிறது; தேவனே அதை அவர்களுக்கு வெளிப்படுத்தியிருக்கிறார்.
- எப்படியென்றால், காணப்படாதவைகளாகிய அவருடைய நித்திய வல்லமை தேவத்துவம் என்பவைகள், உண்டாக்கப்பட்டிருக்கிறவைகளினாலே, உலகமுண்டானதுமுதற்கொண்டு, தெளிவாய்க் காணப்படும்; ஆதலால் அவர்கள் போக்குச்சொல்ல இடமில்லை.

# 5. பிற உயிரினங்கள் மூலமாக

1. எண் 22:28-31
   - உடனே கர்த்தர் கழுதையின் வாயைத் திறந்தார்; அது பிலேயாமைப் பார்த்து: நீர் என்னை இப்பொழுது மூன்றுதரம் அடிக்கும்படி நான் உமக்கு என்ன செய்தேன் என்றது.
   - அப்பொழுது பிலேயாம் கழுதையைப் பார்த்து: நீ என்னைப் பரியாசம் பண்ணிக்கொண்டு வருகிறாய்; என் கையில் ஒரு பட்டயம்மாத்திரம் இருந்தால், இப்பொழுதே உன்னைக் கொன்றுபோடுவேன் என்றான்.
   - கழுதை பிலேயாமை நோக்கி: நீர் என்னைக் கைக்கொண்ட காலமுதல் இந்நாள்வரைக்கும் நீர் ஏறின கழுதை நான் அல்லவா? இப்படி உமக்கு எப்போதாகிலும் நான் செய்தது உண்டா என்றது. அதற்கு அவன்: இல்லை என்றான்.
2. 1 இரா 17:6 - எலியாவுக்கு காகங்கள் அப்பமும், இறைச்சியும் கொண்டு வந்தன
3. யோனா 1, 2 அதி - மீன் யோனாவை விழுங்குதல்

# 6. சொப்பனம் / கனவு வழியாக பேசுவார்

# 6. சொப்பனம் / கனவு வழியாக பேசுவார்

- யாக்கோபு - ஆதி *28:12*
- சாலொமோன் - *1* இரா *3:5* (ஞானம்)
- யோசேப்பு - மரியாளை குறித்து (மத் *1:20*); எகிப்துக்கு போக (மத் *2:13*); இஸ்ரவேல் தேசத்திற்கு போக (மத் *2:19-22*)
- சாஸ்திரிகள் - மத் *2:12*

# 7. தரிசனங்கள் மூலமாக பேசுவார்

# 7. தரிசனங்கள் மூலமாக பேசுவார்

- கனவு/சொப்பனம் என்பது வேறு, தரிசனம் என்பது வேறு
- யாக்கோபு - ஆதி *46:2* - எகிப்துக்கு போக
- தாவீது - *1* நாளா *21:16* - நியாயத்தீர்ப்பு
- ஏசாயா - ஏசா *6:1-8* - தேவனுடைய பரிசுத்தம்
- தானியேல் - தானி *7,8,10*
- எசேக்கியேல் - எசே *37*
- அனனியா - அப் *9:10* - பவுலுக்காக

# 7. தரிசனங்கள் மூலமாக பேசுவார்

- கொர்நெலியு - அப் *10:3-6* - பேதுருவை வர வைக்க
- பேதுரு - அப் *10:10-16* - கொர்நெலியு வீட்டுக்கு போக
- பவுல்
    - அப் *16:9* - மக்கேதோனியா
    - அப் *19:9* - ஆறுதல் படுத்தப்பட்டார்
    - அப் *23:11* - எருசலேமில் ஆறுதல் படுத்தப்பட்டார்
- ஆவியில் தரிசித்தல்
    - ஒருவர் - 2 கொரி *12:1-4* - மூன்றாம் வானம் வரைக்கும்
    - அப். யோவான் - வெளிப்படுத்தின விசேஷம்

8. முகமுகமாய் பேசுவார்

(நாம் காணமுடியாது)

# 8. முகமுகமாய் பேசுவார் (நாம் காணமுடியாது)

- முகமுகமாய் தேவன் வந்தாலும் நாம் பார்க்கமுடியாது, அவரை பார்த்து உயிரோடு இருக்க முடியாது - அந்த அளக்கு மகிமை நிறைந்தவர், ஒளியானவர் - நீ என் முகத்தைக் காணமாட்டாய், ஒரு மனுஷனும் என்னைக் கண்டு உயிரோடிருக்கக்கூடாது (யாத் 33:20)

மோசே

- யாத் 17:6 - ஓரேபிலே நான் உனக்கு முன்பாகக் கன்மலையின்மேல் நிற்பேன்; நீ அந்தக் கன்மலையை அடி; அப்பொழுது ஜனங்கள் குடிக்க அதிலிருந்து தண்ணீர் புறப்படும் என்றார்
- யாத் 33:21-23 - என் பின்பக்கத்தைக் காண்பாய்; என் முகமோ காணப்படாது

# 8. முகமுகமாய் பேசுவார் (நாம் காணமுடியாது)

## எலியா

- *1 இராஜா 19:11 -* இதோ, கர்த்தர் கடந்துபோனார்; பலத்த பெருங்காற்று உண்டாயிற்று; ஆனாலும் அந்தக் காற்றிலே கர்த்தர் இருக்கவில்லை; காற்றிற்குப்பின் பூமி அதிர்ச்சி உண்டாயிற்று; பூமி அதிர்ச்சியிலும் கர்த்தர் இருக்கவில்லை
- *1 இராஜா 19:12 -* அக்கினி உண்டாயிற்று; அக்கினியிலும் கர்த்தர் இருக்கவில்லை; அக்கினிக்குப்பின் அமர்ந்த மெல்லியசத்தம் உண்டாயிற்று.
- *1 இராஜா 19:13 -* இதோ, எலியாவே, இங்கே உனக்கு என்ன காரியம் என்கிற சத்தம் அவனுக்கு உண்டாயிற்று.

## அப். யோவான்

- வெளிப்படுத்தின விசேஷம் - கர்த்தருடைய நாளில் ஆவிக்குள்ளானேன் (வெளிப் 1-22)

# 9. உள்ளத்தில் பேசுவார்

- உள்-உணர்வு / உள்ளுணர்வு / *Intuition*
  - யோபு *32:8,18* - உணர்த்துவார்
  - யாத் *4:15* - உணர்த்துவார்
  - யோவான் *16:8* - பரிசுத்த ஆவியானவர் உணர்த்துவார்
- மெல்லிய சத்தம்
  - எல்லாவற்றிருக்கும் ஜெபித்து கேட்க வேண்டும் - *1* சாமு *30:8*
  - நித்தமும் நம்மை நடத்துவார் - ஏசா *58:11*
  - ஆவியானவர் போதிப்பார் - லூக்கா *12:12*
  - ஆவியானவர் சகல சத்தியத்திற்குள்ளும் நடத்துவார் - யோவா *16:13*
  - ஆவியானவர் வரப்போகிற காரியங்களை அறிவிப்பார் - யோவா *16:13*

# 9. உள்ளத்தில் மூலம் பேசுவார்

- வெளிச்சம் / *illumination* / *light*
  - பரிசுத்த ஆவியானவர் கொடுக்கும் ஒரு வெளிச்சம்
  - வேத வசனத்திலிருந்து, நமது இருதயத்தில் வருவது
  - தானாக வருவது கிடையாது; நாம் வசனத்தில் தேடும்போது உண்டாவது - மத் *4:4;* யோவா *20:31;* அப் *17:11; 2* தீமோ *2:15; 1* பேது *2:2,3*
  - வேதத்தில் நாம் தேடும் காரியத்தை விளக்க பரிசுத்த ஆவியானவர் மனிதர்களை பயன்படுத்துவதும் உண்டு
    - பிலிப்பு எத்தியோப்பிய மந்திரி - அப் *8:30-35*
    - பவுல் - தெசலோனிக்கேய யூதருக்கு - அப் *17:1-3*
    - ஆக்கில்லா பிரிஸ்கில்லா - அப்பொல்லோவுக்கு - அப் *18:24-26*
    - அப்பொல்லோ - ஆகாயா யூதருக்கு - அப் *18:28*

# 10. மற்ற மனிதர்கள் மூலமாக பேசுவார்

# 10. மற்ற மனிதர்கள் மூலமாக பேசுவார்

- போதகர், தலைவர்கள், மூப்பர்கள், மேய்ப்பர்கள், ஊழியர்கள் மூலம் - ஏசா 30:20-21; சங் 141:5; 2 சாமு 7:3
- தீர்க்கதரிசிகள் மூலம் - 2 சாமு 7:15; 1 தெச 5:20
- வரம் பெற்றவர்கள் மூலம் - 1 கொரி 13, 14 அதிகாரங்கள்
- பெரியவர்கள், அறிஞர்க்ள், சக மனிதர்கள் - அப் 18
- அனனியா - பவுல் - அப் 9
- பேதுரு - கொர்நெலியு - அப் 10
- அப்போஸ்தலர்கள் - யூதரல்லாத சபைகள் - அப் 15

# 11. பாடல்கள், புத்தகங்கள் மூலமாக

- வேத வசனங்கள்/உபதேசங்கள் இல்லாதவை
- வேத வசனங்கள்/உபதேசங்கள் உள்ளவை
- கள்ள உபதேசங்கள் நிறைந்தவை
- உதாரணம்
  - சங்கீதங்கள்
  - வேதநாயக சாஸ்திரியார், கிருஷ்ணபிள்ளை, சாராள் நவரோஜி, தந்தை பெர்க்மான்ஸ், எமில் ஜெபசிங் மற்றும் பல
  - மோட்சபிரயாணம்
  - சகரியா பூணன், *R* ஸ்டான்லி, மற்றும் பல

# 12. சூழ்நிலைகள் மூலமாக

மத் 26:74-75

- அப்பொழுது அவன்: அந்த மனுஷனை அறியேன் என்று சொல்லி, சபிக்கவும் சத்தியம்பண்ணவும் தொடங்கினான். உடனே சேவல் கூவிற்று.
- அப்பொழுது பேதுரு: சேவல் கூவுகிறதற்குமுன்னே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று இயேசு தன்னிடத்தில் சொன்ன வசனத்தை நினைத்துக்கொண்டு, வெளியே போய், மனங்கசந்து அழுதான்.

# 13. அடையாளங்கள் மூலமாக

## நியா 6:36-40

- அப்பொழுது கிதியோன் தேவனை நோக்கி: தேவரீர் சொன்னபடி என் கையினாலே இஸ்ரவேலை இரட்சிக்கவேண்டுமானால்,
- இதோ, நான் மயிருள்ள ஒரு தோலைக் களத்திலே போடுகிறேன்; பனி தோலின்மேல்மாத்திரம் பெய்து, பூமியெல்லாம் காய்ந்திருந்தால், அப்பொழுது தேவரீர் சொன்னபடி இஸ்ரவேலை என் கையினால் இரட்சிப்பீர் என்று அதினாலே அறிவேன் என்றான்.
- அப்படியே ஆயிற்று. அவன் மறுநாள் காலமே எழுந்திருந்து, தோலைக் கசக்கி, அதிலிருந்த பனிநீரை ஒரு கிண்ணம் நிறையப் பிழிந்தான்.
- அப்பொழுது கிதியோன் தேவனை நோக்கி: நான் இன்னும் ஒருவிசைமாத்திரம் பேசுகிறேன், உமது கோபம் என்மேல் மூளாதிருப்பதாக; தோலினாலே நான் இன்னும் ஒரேவிசை சோதனைபண்ணட்டும்; தோல்மாத்திரம் காய்ந்திருக்கவும் பூமியெங்கும் பனி பெய்திருக்கவும் கட்டளையிடும் என்றான்.
- அப்படியே தேவன் அன்று ராத்திரி செய்தார்; தோல்மாத்திரம் காய்ந்திருந்து, பூமியெங்கும் பனி பெய்திருந்தது.

# 14. ஊரீம் தும்மீம் மூலமாக

- இந்த காலத்தில் இந்த வகையில் பேசுகிறாரா என்பது தெரியவில்லை
- ஏபோத்தின் மேல் மார்ப்பதக்கம் தொங்க விடப்படும்; சிலவேளை ஆலயத்திலும் தொங்க விடப்படும்
- அந்த மார்ப்பதக்கத்தில் ஊரீம் தும்மீம் என்பது இருக்கும்
- தீர்க்கதரிசி ஒருவன் அதற்கு முன்பாக வந்து தீர்க்கதரிசனம் சொல்லும் போது ஒரு வெளிச்சம் வந்தால் அது உண்மையான தீர்க்கதரிசனம்; இல்லையேல் அது கள்ள தீர்க்கதரிசனம்
- *யாத் 28:30; லேவி 8:8; எண் 27:21; உபா 33:8; 1 சாமு 28:6; எஸ் 2:63; நெகே 7:65*

# முடிவுரை

- தேவன் மனிதனிடம் பேச வேண்டும் என்றால் எந்த வகையிலும் பேசலாம். யோவா *14:26; 16:13* ன்படி பரிசுத்த ஆவியானவரின் பிரதான வேலையே நம்மோடு பேசி நம்மை சரியான வழியில் நடத்துவதே
- ஒன்றுக்கும் மேற்ப்பட்ட வழிகளிலும் தேவன் பேசுவார்
- எந்த வகையில் பேசினாலும், தேவன் தான் பேசுகிறாரா என்பதை வேதத்தை வைத்து உறுதி செய்யனும்
- தேவன் பேசுவதை கேட்க, உங்களை பயிற்றுவியுங்கள்
- இந்த வீடியோ மூலமா கேட்டவைகள் உங்களுக்கு புரிந்திருக்கும் என்று நெனைக்கிறேன்.
- தேவனைக் குறித்து மேலும் அறிந்துக்கொள்ள எங்களுடைய மற்ற வீடியோக்களையும் பாருங்கள்.
- ஏதாவது கேள்விகள் இருந்தால் *WhatsApp* அல்லது *Email* மூலமாக தொடர்புக்கொள்ளுங்கள்.
- தேவனுடைய சத்தத்தை கேட்கும்படி உங்களுக்கு கிருபை அருளுவாராக

# Thank You

BIBLE MINUTES

To know more, please watch other related videos from our YouTube channel or Facebook page and feel free to contact us for any further questions


By Phone / WhatsApp

+91 90190 49070
+91 76765 05599

Email

wordofgod@wordofgod.in

Social

YouTube: Bible Minutes
Facebook: Bible Minutes